# நாலடியார்

இதற்கு

தமிழ்ப்புலவர் களத்தூர்

வேதகிரிமுதலியார் அவர்கள்

இயற்றிய உரையுடன்.






கே. பெ. சிங்காரவேலுமுதலியாரால்

சென்னை:

பூமகள்விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1913.

விலை ரூபா கவ.

கடவுள் துணை.

# நாலடியார்.



"நாலடியார்" என்பதற்கு நான்கடிகளையுடையவெண்பாவாலாகிய நூல் என்பதுபொருள். ஈரடிகளையுடையகுறள்வெண்பாக்கள் திருக்குறளையுணர்த்தினவாறுபோல நாலடிகளையுடைய வெண்பாக்கள் இந்நூலை யுணர்த்திநின்றது. இப்பெயர்க்காரணத்தாலும் திருக்குறளோடு இதற்கு ஒற்றுமைதோன்றுமாறுகாண்க நாலடி - பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். நான்காகிய அடிகளையுடையது என விரியும்; இது வெண்பாவை யுணர்த்திற்று; அவ்வெண்பா தன்னாலாகிய நூலுக்குக் கருவியாகுபெயர். 'நாலடி' என்பது இங்குநாலடிகளையுடைய பிறபாக்களைக்குறியாமற் சிறப்புப்பற்றிவெண்பாவையே குறித்துநின்றது; சிறப்பாவது - வெண்பாக்களுள் 'அந்தணர் சாதிப்பா' என முதன்மையாக எடுத்தோதப்பட்டமையும், நீதிநூல்களில் மிகுதியும் பயின்றுவருந் தன்மையும், திருக்குறளுக்கு இரண்டாவதாக எண்ணப்படும் பெருமையுமுதலாயின என்க. நாலடி எனப் பொதுப்படக் கூறினமையால் இதனுட்பயின்றுள்ள நேரிசை இன்னிசைவெண்பாக்களைக் கொள்க. நாலடியார் என்பதில் ஆர் விகுதி திருக்கோவையார், திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், சிவஞானசித்தியார், என்பவற்றிற்போல உயர்வு குறிக்க வந்தது நாலடிவெண்பாக்களை யுடைமையே யன்றி, வையைநதியில் விடப்பட்ட ஏடுகளுள் இந்நானூறு பாடல்களும் நீர்நிலைக்குமேல் நாலடி உயரம் நின்றன என்னுங் காரணம்பற்றியும், நாலடியார் என்னும் பெயர் இந்நூலுக்கு வந்ததெனவுங் கூறுவர். இது சாதாரணமாய் நாலடிநானூறு எனவும், வேளாண்வேதம் எனவும் வழங்கும்.

இந்நூல் பதினெண்கீழ்க்கணக்கினுள் ஒன்றென்பதை, "நாலடிநான்மணி நானாற்பதைந்திணைமுப் பால்கடுகங்கோவை பழமொழி மாமூலம் மெய்ந்நிலைய காஞ்சியோடேலா

தியென்பவே கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு" என்ற செய்யுளாலறிக. பதினெண் கீழ்க்கணக்கின் நூல்களாவன:— ௧. நாலடியார். ௨. நான்மணிக்கடிகை நானாற்பது. ௩. இனியவை நாற்பது. ௪. இன்னாநாற்பது. ௫. கார்நாற்பது. ௬. களவழி நாற்பது. ஐங்கிணை ௭. ஐந்திணை ஐம்பது ௮. ஐந்திணை எழுபது. ௯. திணைமொழி ஐம்பது. ௧௦. திணைமாலை நூற்றைம்பது. ௧௧.——. ௧௨. முப்பால் திருக்குறள். ௧௩. திரிகடுகம். ௧௪. கோவை ஆசாரக்கோவை. ௧௫. பழமொழி. ௧௬. மாமூலம் சிறுபஞ்சமூலம். ௧௭. காஞ்சி முதுமொழிக்காஞ்சி. ௧௮. ஏலாதி.

கீழ்க்கணக்கி னிலக்கணம்; "அடிநிமிர் வில்லா வெள்ளைத் தொகுதி - யறம்பொரு ளின்ப மடுக்கிய வாயவை-திறம்பட வுரைப்பது கீழ்க்கணக்காகும்"—பன்னிரு பாட்டியல். இவற்றுள் கோவை, காஞ்சி என்பன திருக்கோவையாரும், மதுரைக்காஞ்சியும் எனவும்; முப்பால்-திருக்குறளல்லாத மற்றொருநூல் எனவும் 'ஐந்தொகை' எனப்பாடங்கொண்டு, அவை வேறு ஐந்துநூல்களெனவுங் கூறிப்பதினெண்கீழ்க் கணக்குத் தொகையை முடிப்பராயினும், அவ்வாறுகூறுதல் பொருந்தாமை மேற்போந்த சூத்திரத்தான் உய்த்துணர்க. இவை கீழ்க்கணக்கு என்றதனால் மேற்கணக்கும் உளதென்றறிக; விரிப்பிற் பெருகும்.

---

உ

கடவுள் துணை.

# முகவுரை.

---

நூலாசிரியர்:—சமண முனிவர்கள் இவர்கள் பாண்டி நாட்டின்கண் மதுரைமாநகரத்து உக்கிரப்பெருவழுதி என்னும் அரசனால் ஆதரிக்கப்பட்ட புலவர்கள்.

இவரது சமயம்:—ஆருகதம். அஃதாவது அருகக் கடவுளை வழிபடும் மதம். இஃது இந்நூலுள் ஆருகதமதத்துக்கு இன்றியமையாததாய துறவறவியலை முதற்கண் கூறியுள்ளமையாலும் இனிது விளங்கும்.

இவர்களிருந்த காலம்:—சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், திருக்குறள், பத்துப்பாட்டு, புறநானூறுமுதலியசிறந்த காப்பியங்கட்கு உரைசெய்தருளிய நச்சினார்க்கினியர், பரிமேலழகர் முதலிய ஆசிரியர் தத்தமுரைகளில் இந்நூலினின்றுமேற்கோள் எடுத்தாண்டமையாலும், பதினெண் கீழ்க்கணக்கு நூற்றொகையுள் இதனைச்சங்கத்தார் சிறப்பாகக் கொண்டிருத்தலானும், இந்நூலியற்றியோர் காலம்கடைச் சங்கத்தார் காலமெனல்வேண்டும்; எனவே, இற்றைக்குச் சற்றேறத்தாழ இரண்டாயிரவருடங்களிற் குறையாது.

இவரது காலத்திருந்தபுலவர்கள்—கடைச் சங்கத்து நாலாராய்ந்தபுலவர் நாற்பத்தொன்பதின்மரும்பிறருமாம்.

நாலடியாரின் வரலாறு:—ஒருகாலத்தில் ஜயின முனிவர் எண்ணாயிரவர்கள் கொடிய பஞ்சத்தால் தேசம்விட்டுப் பாண்டிநாடடைந்து அந்நாட்டரசனால் ஆதரிக்கப்பட்டு வந்தனரென்றும், அவர்கள் சிலகாலஞ் சென்றபின்பு பஞ்சம் நீங்கித் தேசஞ் செழிப்படைந்ததறிந்து, தங்கள் ஊருக்குப்போக விடைதரல்வேண்டுமென்று பாண்டியனைக் கேட்டனரென்றும், மகாராஜா பல சாஸ்திரங்களிலும் வல்ல புலவர்கள் இருப்பது தன்னிராஜசபைக்கு ஓர் அணியெனக் கருதி யிருந்தனனாதலால் அவர்கள் தன்னைவிட்டுநீங்கமனமில்லாதவனாய் அவர்கள்வேண்டுகோளுக்கிணங்கவில்லையென்றும், அதனால் முனிவர்கள் ஒருநாள் இரவில் யாருமறி

யாதபடி பாண்டிநாட்டைவிட்டு அகன்றனரென்றும், பொழுதுவிடிந்தபின் அம்முனிவர்கள் போனவழி தெரியாமல் திகைத்து அவர்கள் உறைவிடங்களைச் சோதனை செய்யும்போது ஒவ்வொரு முனிவர்களின் ஆசனத்தின்கீழ் ஒவ்வொரு பாடலெழுதிய சீட்டு வைக்கப்பட்டிருந்ததென்றும், அப்பாடல்கள் அநேகமாயும், ஒன்றுக்கொன்று கருத்தில்பொருத்தமில்லாமல் முரணுமிருந்தமையால், அரசனது உத்தரவின்படி வைகையில் எறியப்பட்டனவென்றும், அவற்றுள் நானூறு பாடல்கள் எதிர் ஏறிக் கரை சேர்ந்தன வென்றும், அவற்றைப் பாண்டியன் ஒரு நூலாக்கி நாலடியார் எனப் பெயரிட்டு வழங்கினனென்றும், எஞ்சியபாடல்களில் கரை சேர்ந்தனவாகிய சில பழமொழி அறநெறிச்சாரம் என்கிற பெயர்களால் வழங்கி வருகின்றன வென்றுஞ் சொல்லுகின்றனர். இதனை,

"மன்னன்வழுதியர்கோன்வையைப்பேராற்றினிடை
யெண்ணியிருநான்கோடாயிரவர்—நண்ணி
யெழுதியிடுமேட்டுக்குளெதிரிமேலேறும்
பழுதில்லாநாலடியைப்பார்."

எனும் பழைய வெண்பாவா னறியத்தகும்.

இனி இவ்வாறன்றி, மூன்றுஞ் சங்கம் ஸ்தாபித்ததற்குமுன்பு ஒருகாலத்தில் "எட்டு மலைச்சாரலில் சமணமுனிவர்கள் எண்ணாயிரவர்கள் வசித்துவந்தார்கள்; அவர்கள் தனித்தனி ஒவ்வொரு வெண்பாப்பாட அவை பற்பலவாயின; அவற்றைச்சேர்த்துப்பார்க்கும்பொழுது அவைகள் ஒரேவிஷயத்தை ஒரே கருத்தால் விரித்துக் காட்டுகிற பல பாடல்கள் காணப்பட்டன; அவற்றுள் ஒரே விஷயத்தினை ஒவ்வொரு கருத்தால் தனித்தனி கூறும் நானூறு பாடல்களைப் பொறுக்கிச் சேர்த்து நாற்பது அதிகாரமாக முடிந்ததாம்" எனக் கூறுவதுமுண்டு.

இந்நூல் நுதலும்பொருள்:—இவ்வுலகத்தில் இல்வாழ்க்கையில் நின்றடையலாகும் இம்மைப் பயன்களையும், இந்திராதிதேவர்களுடைய பதவிகளாகிய சுவர்க்காதி லோக

ங்களில் நுகரலாகும்மறுமைப் பயன்களையும்அடைதற்குரி ய உயிர்கட்கு உறுதியென உயர்ந்தோராற் கொள்ளப்பட் டபொருள் நான்கு; அவை, அறம், பொருள், இன்பம், வீ டு என்பன. இவையே தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்று வடநூலார் கூறும் சதுர்வித புருஷார்த்தங்கள். இ வற்றுள் வீடென்பது சிந்தையுமொழியுஞ் செல்லாநிலைமை த்தாதலின் "நன்று ஞாலங் கடந்துபோய் நல்லிந் திரியமெ ல்லா நீதித் தொன்றாய்க் கிடந்த வரும்பெரும்பா லதுப்பி லதனை யுணர்ந்துணர்ந்து - சென்றாங் கின்பதுன்பங்கள்செ ற்றுக் களைந்து பசையற்றால் - அன்றே யப்போ தேவீடும துவே வீடு வீடாமே", "அற்றது பற்றெனிலுற்றதுவீடு" எனவும், "பரனை நினைந் திம்மூன்றும் - விட்டதே பேரின்ப வீடு" எனவும் அறிந்தார் உரைத்தருளியபடி, துறவறமாகி ய காரணவகையாற்கூறப்படுவதேயன்றி இலக்கணவகையா ற் கூறப்படாமையின், நூல்களாற் கூறப்படுவன அஃதொ ழிந்த ஏனையமூன்றுமேயாம். அவற்றுள் அறமாவது - இம் மை மறுமைவீடு என்னும் மும்மையும் தரும் முறையுடை யதாய், மநுமுதலியநூல்களில் விதித்தனசெய்தலும் விலக் கியன ஒழிதலுமாம். அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப்படும். இம்மூன்றனையும் முறையே ஆசாரம், வியவகாரம், பிராயச்சித்தம்என்பது வடநூலார். அவற்று ள் ஒழுக்கமாவது - அந்தணர்முதலிய வருணத்தார் தத்த மக்கு விதிக்கப்பட்ட பிரமசரியம் முதலிய நிலைகளினின்று நிலை - ஆசிரமம், அவை, பிரமசரியம், கிரகஸ்தம், வானப் பிரஸ்தம், ஸந்யாஸம் என்பன அவ்வவற்றிற்கு ஓதிய அற ங்களின் வழுவாது ஒழுகுதல். வழக்காவது - ஒருபொரு ளைத் தனித்தனியே எனது எனது என்றிருப்போர், அது காரணமாகத் தம்முண் மாறுபட்டு அப்பொருண்மேற்செல் வது; அது-கடன்கோடன் முதற் பதினெட்டுப் பதத்தாம்.

விவகாரம் பதினெட்டாவன:—கடன் கோடல், உப நிதி, கூடிமேம்படல், நல்கியதை நல்காவை, ஒப்பிப் பணி செய்யாமை, கூலிகொடாமை, உடையனல்லான் விற்றல்,

விற்றுக்கொடாமை, கொண்டுள்ளமொப்பாமை, கட்டுப்பாடுகடத்தல், நிலவழக்கு, மாதராடவர் தருமம், தாயபாகம், வன்செய்கை, சொற்கொடுமை, தண்டக்கொடுமை, சூது, ஒழிபு என இவை, இவற்றின் விவரங்களைக் கேட்டுணர்க.

தண்டமாவது - அவ்வொழுக்கநெறியினின்றும் தவறினோரை அந்நெறியில்நிறுத்துதற்பொருட்டுநடுவுநிலைமையாய்ஆராய்ந்துஅந்தந்தக்குற்றத்திற்குத்தக்கவாறுதண்டித்தல், இவைமூன்றனுள், வழக்குந்தண்டமும் உலகத்தைநல்வழியில் நடத்துதற்கே பயன்படுவனவல்லது, ஒழுக்கம்போலமக்களுயிர்க்கு நன்மைசெய்யுஞ் சிறப்புடையன ஆகாமையாலும், அவை தாம் நூல்களாலேயன்றி, அறிவின் மிகுதியாலும் தேசத்தின் இயற்கையாலும் அறியப் படுதலாலும் அவ்வழக்குத் தண்டங்களையொழித்து, "நாலுமிரண்டுஞ் சொல்லுக்குறுதி" எனவும்,

"நாலடிவள்ளுவராமேயிப்பாலைநடந்தபெருங்
காலடிமேலடிமானடியேகட்டுரலிற்—பட்ட
பாலடிசில்வெண்ணெயுண்டோனரங்கன்பனிவரையில்
வேலடிமுள்ளுக்குபாயமிட்டேகும்விரகுநன்றே"

என்னும் உடன்போக்குத் துறைசெய்யுளில், தலைவியை உடன்கொண்டு சென்ற தலைவன் அவளது காலில் முட்கள் தாக்குறாவண்ணம்தான்முன்னேசெல்லத் தனது அடிச்சுவட்டின்மீது தலைவி அடிவைத்து நடக்க, அந்நாலடியும் ஈரடியாய்த் தோன்றியதற்கு நாலடியாரையும் திருக்குறளையும்உவமமெடுத்து, அவரதுஉள்ளத்தின் ஒற்றுமைநிலைகூற வந்த கவி, அவரது நாலடியும் ஈரடியாயினஎனச்சாதுரியம் படவுரைத்து, 'நாலடிவள்ளுவராமே' எனவும் நாலடியாருக்கும் திருக்குறளுக்கும் உள்ள ஒற்றுமையைக்குறிப்பாய்க் குறிப்பாற் கூறினமையாலும், அத்திருக்குறளிற்போல அதனோடு ஒற்றுமைப்பட்டஇந்நூலிலும்சிறப்புடைய ஒழுக்கமே அறமென எடுத்துக் கொள்ளப்பட்டது. அவ்வறமும் பிரமசரியமுதலிய நால்வகைநிலையினையுடையதாய், வருணந்தோறும் வேறுபாடுடைமையாற் சிறுபான்மையாகிய அ

ச்சிறப்பியல்புகளை யொழித்து, எல்லார்க்குமொப்பமுடிதலின் பெரும்பான்மையாகிய பொதுவியல்புபற்றி இல்லறம் துறவறமென இருவகைநிலையாற் கூறப்பட்டது. அவற்றுள் இல்லறமாவது - இம்மை மறுமை யின்பங்களைப் பயத்தற்கு உரிய இல்வாழ்க்கைநிலைக்குச் சொல்லுகின்ற நெறியில் நின்று அவ்வில்வாழ்க்கை நல்வாழ்க்கை யாமாறு அதற்குத் துணையாகிக் கற்புடையநல்லவளாகிய இல்லவளோடுஞ் செய்யப்படும் தருமமாம். துறவறமாவது - மேற்கூறிய இல்லறத்தின் வழுவாதொழுகி மெய்யுணர்வுஉடையராய், பல்வகைத்துன்பத்திற் கிடனாய பிறப்பையஞ்சி அந்தமில்பேரின்பத்ததாய வீடுபெறற்பொருட்டு இருவகைப்பற்றும் முற்றும் அற்றுநின்ற துறவிகட்குரித்தாகிய தருமமாம். இல்லறம் துறவறம் என்னும் இவ்விருவகை நிலையுள் இல்லறம், துறவறம்போல உண்டி சுருக்கல் முதலிய துன்பமுடையதாகாமல் துறவறத்திற்கும் ஒருவகைக்காரணமா யிருந்தல்பற்றி இல்லறம் முன்னும் துறவறம்பின்னுமாகத் திருக்குறளில்வைத்துக் கூறப்பட்டிருப்பினும், இந்நூலில் அவ்வாறின்றித் துறவறம் அழிவில்லாததும் அழிவிலின்பமுடையதுமான முத்திபெறுதற்கு ஏதுவாதலால் அச்சிறப்புப்பற்றி அது முன்னும் இல்லறம் துறவறம்போல வீடுபேற்றிற்குக் காரணம் ஆகாமையால் அச்சிறப்பின்மைபற்றி அது பின்னுமாக நிறுத்திக் கூறப்பட்டன. இந்நூலில் அறத்துப்பாலை முதற்பதின்மூன்று அதிகாரங்களாற் கூடத்தொடங்கி (இந்நூலை ஆக்கியோர் சமணராதலின் அவரது சமயக்கோட்பாட்டுக் கிணங்க) முத்திக்குக் கருவியான துறவறத்தை முதலேழதிகாரங்களாலும், அதற்கு எதிர்நிலையாகிய இல்லறத்தை அதன்பின் ஆறதிகாரங்களாலுங் கூறி, பதினான்கா மதிகாரந்தொடங்கி இருபத்தாறதிகாரங்களாற் பொருட்பாலைக் கூறப்புகுந்து, கல்விமுதல் கற்புடை மகளீறாக அதனை முடித்து, காமத்துப்பாலை ஓரதிகாரத்தா லமைத்தனர். இதுகாரண காரிய முறைப்படி ஒத்துமுறை வைக்கப்பட்டது.

இந்நூலின்:—அரசர், அந்தணர், தாய், தந்தை, ஆசிரியர், நட்பினர், உறவினர், மேலோர், கீழோர் முதலாயினோருடைய தன்மைகளை யறிந்து அவர்மாட்டுத் தக்கவாறொழுகி இம்மையில் இன்பம்பெறுதலும், உடல்பொருள் நிலையாமையை யுணர்ந்து அவற்றில் நசையற்றுத் துறவொழுக்க நெறியறிந்து முத்திபெறுதற்கு உபாயந் தேடிக் கொள்ளலுமாம்.

---

# வேறு குறிப்புகள்.

இந்நாலடியாரிற் கூறப்பட்ட விஷயங்கள் பலதேயத்தாரும் பல மதத்தாரும் கொண்டொழுகலாம்படி பொதுவாயிருத்தலால் இந்நூல் வேறு பாஷைகளிலும் மொழிபெயர்க்கப்பட்டு வழங்குகின்றது. இது மநுமுதலிய ஸ்மிருதிகளிற் கூறியுள்ள நீதிகளையும் சமணநூல்களிற் கூறியுள்ள நீதிமுறைகளையுந் தழுவியிருக்கின்றது. திருக்குறளிற் பகுக்கப்பட்டுள்ளதுபோல இந்நூலில் இயலதிகாரங்களின் பாகுபாடு செய்தவர் பதுமனார் என்னும் ஒருசமணவித்வான்; அவர் இந்நூலுக்கு உரையுஞ் செய்துள்ளதாகக் கூறப்படுகின்றது அவருடைய உரையென இக்காலத்து வழங்குமொரு பொழிப்புரையின் போக்கை நோக்குமிடத்து அஃது அவரதுதான் என்று துணிவதற்குக் கூடவில்லை. இஃதன்றி அக்காலத்திருந்த மற்றொரு சமணவித்வானும் ஓருரை செய்திருப்பதாகக் கேள்வி. இந்நூலையியற்றியோர் சமணராதலின் அவர்மதத்திற்கு இன்றியமையாதனவாகிய யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை, செல்வநிலையாமை, பிறர்மனை நயவாமை முதலியவை இதனுள் வற்புறுத்திக் கூறப்படுகின்றன. இந்நூலினது பெருமை, உலகுய்யத்தோன்றி நிரம்பிய புலமைத் திறம்படைத்த நச்சினார்க்கினியர் பரிமேலழகர் முதலிய பண்டையுரையாசிரியர்கள் தாம் தாம் இயற்றிய சிறந்த காப்பிய

உரைகளில் இந்நூலைப் பலவிடங்களில் எடுத்து மேற்கோள் காட்டியுள்ளமையானும் திருக்குறளோடு ஒரு கோவை பாகவைத்து வழங்கப்படலானுமுணர்க. இது நானூறு பாடல்களையுடையதென்பதையும், இதனை இயற்றினோர் எண்ணாயிரவ ரென்பதையும், மற்று மிதன் பெருமைகளை யும் அடியில்வரும் செய்யுட்களானு மறிக.

எண்ணாயிரவரிசைத்தவெண்பாநானூறும்
கண்ணாமிந்நாலடியைக்கற்றுணரத்—தண்ணார்
திருக்குருகூர்மாறனையேதேர்ந்துமறைதேர்ந்த
திருக்குருகூர்மாறனையேதேர்.

நானூறும்வேதமாநானூறுநானூறும்
நானூறுங்கற்றற்குநற்றுணையா—நானூறும்
பண்மொழியாள்பாகம்பகிர்ந்துசடைக்கரந்த
கண்ணுதலான்பெற்றகளிறு.

வெள்ளாண்மரபுக்குவேதமெனச்சான்றோர்கள்
எல்லாருங்கூடியெடுத்துரைத்த—சொல்லாய்ந்த
நாலடிநானூறுநன்கினிதாவென்மனத்தே
சீலமுடனிற்கதெளிந்து.

---

உ

கடவுள் துணை.

# நாலடியார்

# அதிகார அட்டவணை.

உ

கடவுள் துணை.

# NALADIYAR.



# நாலடியார்

## மூலமும்-உரையும்.



### கடவுள் வாழ்த்து.

நேரிசைவெண்பா.

வானிடுவில்லின்வரவறியாவாய்மையாற்
கானிலந்தோயாக்கடவுளை—யாநிலஞ்
சென்னியுறவணங்கிச்சேர்துமெம்முள்ளத்து
முன்னியவைமுடிகவென்று.

(இ-ள்.) வான் - மேகத்தில், இடு - இடப்பட்ட, வில்லின் - இந்திரவில்லினது (காட்சியொத்த) வரவு - பிறப்பு வரவை, அறியா - அறிந்து, வாய்மையால் - உண்மையினால், கால் - திருவடிகள், நிலம் - பூவுலகில், தோயா - படியாத, கடவுளை - முதற்கடவுளை, யாம் - நாம், நிலம் - பூமியில், சென்னி - சிரசானது, உற - பொருந்த, வணங்கி - பணிந்து, எம் - எம்முடைய, உள்ளத்து - இருதயத்தில், முன்னியவை - நினைந்தனவாகிய (அறம்பொருளின்பமென்னுமுப்பால்களும்) முடிகவென்று - முடியவேண்டுமென்று நினைத்து, சேர்தும் - அடைவோம். என்றவாறு.

முன்னியவையென்றது - உள்ளத்து நினைந்தவையாவுமெனப்பொருள் கொள்ளினும் பொருந்தும். மேகத்தில்-வில்விடுகிறதும் கெடுகிறதுந்தெரியாமைபோலப் பிறப்புண்டாதலும் இறப்புண்டாதலுந்தெரியாது. ஆதலால்,வில்லைப் பிறப்புக்கு உவமை கூறினர்.

இதன்தாற்பரியம் வானவில்லினது தோற்றமும் அழிவுநிகர்த்த பிறப்பையும் இறப்பையுமறிந்து எம்மனதில் நினைந்தவை முடிகவென்று நினைத்துக் கடவுளை வணங்குவோம் என்பதாம்.

யாம் - எழுவாய், சேர்தும் - பயனிலை, கடவுளை - செயப்படுபொருள். நாலடியார் இதில் ஆர்விகுதி உயர்வுப் பொருட்கண்வந்தது. குறள்வெண்பா இரண்டடி,சிந்தியல் வெண்பா மூன்றடி, பஃறொடைவெண்பா பலவடி, இவை போலாகாமை, இந்நூல் வெண்பா நானூறும் நாலடியாக வந்தமையால் நாலடியென்று காரணப்பெயர் பெற்றது.

அகத்தியம், "தொகுத்தகவியைச் சொற்சொல்லாகப் பகுத்துப் பொருள் சொலல் பதவுரையாமே" "கவிப்பொருள் சுருக்கிக்காட்டறுற் பரியம்."

---

# ௧. அறத்துப்பால்.



அஃதாவது விதித்தவை கொள்ளலும், விலக்கியவை தள்ளலும்.

## ௧-ஆம். அதிகாரம். செல்வநிலையாமை.



அஃதாவது செல்வமானது நிலைநில்லாமையாம்.

அறுசுவையுண்டியமர்ந்தில்லாளூட்ட
மறுசிகைநீக்கியுண்டாரும்—வறிஞராய்ச்
சென்றிரப்பரோரிடத்துக்கூழெனிற்செல்வமொன்
றுண்டாகவைக்கற்பாற்றன்று.

(இ-ள்.) அறுசுவை - அறுவகைருசியாகிய, உண்டி - உணவை, அமர்ந்து - விரும்பி, இல்லாள் - மனைவி, ஊட்ட - ஊட்டுதல்செய்ய, மறு - மறுக்கப்பட்ட, சிகை - (வன்மையான)பதார்த்தங்களை, நீக்கி - தள்ளி, உண்டாரும்-(மென்மையான பதார்த்தங்களை) உண்டாரும், வறிஞராய்-தரித்திரராய், ஓரிடத்து - ஒருவிடத்தில், சென்று - போய், கூழ்-கூழினை, இரப்பரெனில் - யாசிப்பாராகில், செல்வம்-ஐசுவரியமானது, ஒன்றுண்டாக - ஒருபொருளுள்ளதாக, வைக்கல் - வைக்கும், பாற்று - பகுதியுடையது, அன்று-அல்ல. எ-று.

அரும்பதக்கொத்து "சிகையென்பதுவே பதார்த்தமாகு - மதுவே வன்மை மென்மை யெனப்படும்" இவ்விதியால் சிகையென்பது பொதுப்படப் பதார்த்தமாம், செல்வர்கள் வன்மையான பதார்த்தங்களை வருத்தமுற்றுக் கடித்து உண்ணுத லரிதாகலின் மறுசிகை நீக்கி யென்றார். இளமை நிலையாமையில் "பருவ மெனைத்துள பல்லின்பாலேனை இருசிகையுமுண்டீரோ" என்றதில் வயதினளவையும், பற்களின் வலியினளவையும் வினவிய விடத்தும், இருசிகை யென்றதற்குப் பொருள் வன்மையான பதார்த்

தங்களும், மென்மையான பதார்த்தங்களுமேயாம், சிகை படைத்த சாதமெனினும் ஒருபிடிசோறெனினும் பொருந்தும், முற்சிகை நீக்கிப் பிற்சிகையுண்டாருமெனக் கொள்ளினுமமையும்.

இதன் தாற்பரியம். அறுசுவைப் போசன பதார்த்தங்களை மனையாளூட்டுதல் செய்ய உண்ட செல்வர்களும் ஓரிடத்திற்போய்க் கூழை இரந்துண்பாராலுல் செல்வமானது ஒருபொருளாக வைக்கும் பகுப்புடைய தல்ல என்பதாம். செல்வம் - எழுவாய், வைக்கற்பாற்றன்று - பயனிலை (க)

துகடீர்பெருஞ்செல்வந்தோன்றியக்காற்றொட்டுப்
பகடுநடந்தகூழ்பல்லாரோ—டுண்க
வகடுறயார்மாட்டுநில்லாதுசெல்வஞ்
சகடக்கால்போலவரும்.

(இ-ள்.) அகடு - நடுநிலைமை, உற - பொருந்த, யார் மாட்டும் - யாவரிடத்தும், செல்வம் - ஐசுவரியம், நில்லாது - நிற்காது, சகடம் - தேரின், கால்போல் - உருளையைப்போல, வரும் - (கீழ்மேலாய் மேல்கீழாய்) வருமாதலால், துகள் - குற்றம், தீர் - நீங்கிய, பெரும் - பெரிய, செல்வம் - சம்பத்தானது, தோன்றியக்கால் - கிடைத்தால், தொட்டு - (கிடைத்தகாலந்) தொடங்கி, பகடு - ஏர், நடந்த - உழுத, கூழ் - உணவை, பல்லாரோடு - பற்பலருடன், உண்க - நீயுண்பாயாக எ-று.

தோன்றியக்காலென்பது வினையெச்சமே பெயரெச்சமாகில் ஒற்றுமிகாது.

இ-ம். செல்வமானது யாவரிடத்து நில்லாது தேர்ச்சக்கரம்போலக் கீழ்மேலாய் மேல்கீழாய்வருமாதலால் செல்வங்கிடைத்தால் பலருடனுண்ணக் கடவாய் என்பதாம். நீ - தோன்றா எழுவாய், உண்க - பயனிலை, கூழ் - செயப்படுபொருள், இதில் ஐயுருபுதொக்கியது, நல்வழியில் வந்த செல்வமென்றறிதற்குத்துகடீர் பெருஞ்செல்வமென்றார். ()

யானையெருத்தம்பொலியக்குடைநிழற்கீழ்ச்
சேனைத்தலைவராய்ச்சென்றோரு—மேனை
வினையுலப்பவேறாகிவீழ்வர்தாங்கொண்ட
மனையாளைமாற்றார்கொள.

(இ-ள்.) யானை - யானையினது, எருத்தம் - பிடரியில், பொலிய - பிரகாசிக்க, குடை - வெண்குடையின், நிழற்கீழ் - நீழலின்கீழே, சேனை - சதுரங்கசேனைக்கும், தலைவராய் - முதல்வராய், சென்றோரும் - சென்ற வரசர்களும், ஏனைவினை - தீவினை, உலப்ப - கெடுக்க, வேறாகி - வேறுபட்டு, தாம் - தாங்கள், கொண்ட - இல்வாழ்க்கைக்குத் துணையாகக்கொண்ட, மனையாளை - மனையவளை, மாற்றார் - பகைவர், கொள - கைக்கொள்ள, வீழ்வர் - கெடுவர்.

இ-ம். சதுரங்க சேனைக்குத்தலைவராய்ச்சென்றவரசர்களும் தீவினைகெடுக்க வேறுபட்டுத் தங்கள் மனைவிகளைப் பகைவர் கைக்கொள்ளக்கெடுவர்கள் என்பதாம். சென்றோர் - எழுவாய், வீழ்வர் - பயனிலை, உம்மை - சிறப்பும்மை ()

நின்றனநின்றனநில்லாவெனவுணர்ந்
தொன்றினவொன்றினவல்லேசெயிற்—செய்க
சென்றனசென்றனவாழ்நாள்செறுத்துடன்
வந்ததுவந்ததுகூற்று.

(இ-ள்) வாழ்நாள் - ஆயுள்கள், சென்றன சென்றன - போயின போயின, செறுதது - கோபித்து, உடன் - உடனே, கூற்று - இயமன், வநததுவந்தது - வந்தான் வந்தான் வந்தான் (ஆதலால்,) நின்றன நின்றன - நின்றனவாகிய நின்பொருள்கள், நில்லாவென - நிற்காவென, உணர்ந்து - அறிந்து, ஒன்றினவொன்றின - பொருந்திய ஒருவகை (தருமத்தை,) செயின் - செய்வையாகில், வல்லே - சீக்கிரத்தில், செய்க - செய்யக்கடவாய் எ-று.

இலக்கணத்திரட்டு [உயர்திணை யீறுபோ லஃறிணை வருதலு - மஃறிணை யீறுபோலுயர்திணை வருதலு - மருகல்

விதியென வரைந்தன ரான்றோர்] இவ்விதியால் கூற்று என்னும் அஃறிணையீறு உயர்திணைக்கு வந்தது, சென்றன சென்றன - வந்தனவந்தன, இவை விரவின்கண் இரட்டித்தன. இ - ம். ஆயுள்கள்போயின, இயமன் வந்தான் வந்தான் - நின்றனவான செல்வங்கள் நில்லாவெனவறிந்து, பொருந்திய தருமங்களை நீசெய்தால் சீக்கிரஞ்செய்யக்கடவாய், என்பதாம். நீ - தோன்றா எழுவாய், செய்க - பயனிலை.(௪)

என்னானுமொன்றுதங்கையுறப்பெற்றக்காற்
பின்னாவதென்றுபிடித்திரா—முன்னே
கொடுத்தாருயப்போவர்கோடிமீக்கூற்றங்
தொடுத்தாறுசெல்லுஞ்சுரம்

(இ-ள்) என்னானும் - யாதாகிலும், ஒன்று - ஒருபொருள், தம் - தமது,கை - கையில், உற - பொருந்த, பெற்றக்கால் - பெற்றால், பின்னாவதென்று - பின்கொடுப்போமென்று, பிடித்திரா-பிடித்திராமல், முன்னே - முற்காலத்தில், கொடுத்தார் - கொடுத்தவர்கள், கோடு - தன்செய்கையிற் கோட்டம், இல் - இல்லாத, தீ - பொல்லாத, கூற்றம்-இயமன், தொடுத்து - பாசத்தாற்கட்டி, செல்லும் - போகும், சுரம் - பாலைவனத்தினது, ஆறு - வழியை, நீங்கிஉயப்போவர் - பிழைத்துப்போவார்கள். எ-று.

யாதாகிலும் ஒருபொருள் தன்கையிற் பெற்றால், பின் கொடுப்போமென்று வைத்திராது முன் கொடுத்தவர்கள், இயமன் கொண்டுபோம் வழியை நீங்கிப் பிழைத்துப் போவார்கள் என்பதாம். கொடுத்தார் - எழுவாய், உயப்போவர் - பயனிலை, ஆறு - செயப்படுபொருள். இதில் ஐயுருபு தொக்கியது,காலையின்மலர்ந்தமலர்மாலையி னுலர்ந்தழியுமாறுபோற் செல்வமழிதல்பற்றிமுன்னே கொடுத்தாரென்றார்.

இழைத்தநாளெல்லையிகவாபிழைத்தொரீஇக்
கூற்றங்குதித்துய்ந்தாரீங்கில்லை—யாற்றப்
பெரும்பொருள்வைத்தீர்வழங்குமினாளைத்
தழீஇந்தழீஇந்தண்ணம்படும்.

(இ-ள்.) இழைத்த-தமக்களவுசெய்த, நாள்-நாள்கள், எல்லை-தம்மளவை, இகவா-கடவா, கூற்றம்-இயமனை, பிழைத்து-தப்பி, ஒரீஇ-நீங்கி, குதித்து-அவன்குறிப்பைக்கடந்து உய்ந்தார்-பிழைத்தவர்கள், ஈங்கு-இவ்வுலகத்து, இல்லை-இல்லை, நாளை-நாளையே, தழீஇந் தழீஇம்-தழீஇந் தழீஇமென்னுமோசையுடனே, தண்ணம்-பிணப்பறை, படும் - சாற்றப்படுமாகையால், ஆற்ற-மிகவும், பெரும் - பெரிய, பொருள்-பொருளை, வைத்தீர்-தேடி வைத்தவர்களே, வழங்குமின்-அப்பொருளைக்கொடுங்கள் எ-று.

தமக்களவு செய்த நாள்கள்தம் மெல்லையைக் கடவா இயமனைக்கடந்து பிழைத்தவர்கள் இவ்வுலகத்திலில்லை நாளையே பிணப்பறை சாற்றப்படும், பொருளைத் தேடிவைத்தவர்களே நீங்கள் கொடுங்கள் என்பதாம். நீங்கள்-எழுவாய், வழங்குமின்-பயனிலை, பொருள்-செயப்படுபொருள் இதில் ஐயுருபு தொக்கு நின்றது. (௬)

தோற்றஞ்சான்ஞாயிறுநாழியாவைகலுங்
கூற்றமளந்துநுந்நாளுண்ணு—மாற்ற
வறஞ்செய்தருளுடையீராகுமின்யாரும்
பிறந்தும்பிறவாதாரில்.

(இ-ள்.) தோற்றம் - உதயம், சால் - மிகுந்த, ஞாயிறு- சூரியனை, நாழியா - அளவுக் கருவியாக, வைகலும் - தினந்தோறும், கூற்றம் - இயமன், அளந்து - அளவிட்டு, நும்- உங்களுடைய, நாள் - ஆயுளை, உண்ணும் - உண்பானாகையால், யாரும் - யாவரும், பிறந்தும் - மக்கட் பிறப்பாய்ப் பிறந்தும் (வீணாகாமல்,)பிறவாதாரில் - பிறவாது மோட்சத்திலிருப்பவரைப்போல, ஆற்ற-மிகவும், அறம்-தருமத்தை, செய்து - பண்ணி, அருளுடையீராகுமின் - கிருபையுடையீராகுங்கள். எ-று.

யாரும் - யாவரும், பிறந்தும் - மனிதப் பிறப்பிற் பிறந்தும்அறஞ்செய்யாராகில், பிறவாதாரில்-பிறவாதவர்களில் வைத்தெண்ணப்படுவர் - எனினு மமையும். இ-ம். இயமன்

சூரியனைப்படியாகக்கொண்டுஉங்கள்நாளையளந்து உண்ணு கிறான் ஆகையால் தருமத்தைச்செய்து கிருபையுடையீரா குங்கள் என்பதாம் நீங்கள் - தோன்றா எழுவாய், அருளு டையீராகுமின் - பயனிலை, ஆண்பாலும் பெண்பாலுமென் றறிதற்கு யாருமென்றார். (எ)

செல்வர்யாமென்றுதாஞ்செல்வுழியெண்ணாத
புல்லறிவாளர்பெருஞ்செல்வ—மெல்லிற்
கருங்கொண்மூவாய்திறந்தமின்னுப்போற்றோன்றி
மருங்கறக்கெட்டுவிடும்.

(இ-ள்.) செல்வர் - செல்வமுள்ளோர், யாமென்று-நா மென்று, தாம் - தாங்கள், செல்வழி - போமிடத்து, எண் ணாத - நினையாத, புல் - அற்ப, அறிவாளர் - அறிவுடையா ரது, பெரும் - பெரிய, செல்வம் - ஐசுவரியம், எல்லில்- இராக்காலத்தில், கரும் - கரிய, கொண்மூ - மேகமானது, வாய்திறந்த - வாய்விடப்பட்ட, மின்னுப்போல் - மின்னலை ப்போல, தோன்றி - உண்டாகி, மருங்கு - வழி, அற-முற் றாக, கெட்டுவிடும் - கெட்டுப்போம். எ-று.

செல்வமானது மின்னலைப்போலத் தோன்றி யழியும் என்பதாம். செல்வம் - கெட்டுவிடும். (அ)

உண்ணானொளிநிறானோங்குபுகழ்செய்யான்
துன்னருங்கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான்பொருள்காத்திருப்பானேல்அஆ
விழந்தானென்றெண்ணபபடும்.

(இ-ள்.) உண்ணான் - உண்ணாதவனாக, ஒளி - பிரகாச த்தை, நின்றான் - நிறுத்தாதவனாக, துன் - பெறுதற்கு, அ ரும் - அரிய, கேளிர் - சுற்றத்தாருடைய, துயர் - துன்பத் தை, களையான் - நீக்காதவனாக, வழங்கான் - கொடாதவ னாக, கொன்னே - பயனில்லாமல்,பொருள் - திரவியத்தை, காத்து - காத்துக்கொண்டு, இருப்பானேல் - இருப்பானா னால், அ ஆ - ஐயோ, இழந்தானென்று - இவன்பொருளை

யிழந்தானென்று, எண்ணப்படும் - யாவராலும் எண்ணப்படுவான். எ-று.

இ-ம். பொருளைத் தேடிச் செலவிடாது வைத்துக் காத்திருந்தவன் பொருளை யிழந்தானென்று யாவராலும் நினைக்கப்படுவான் என்பதாம். இவன்-தோன்றா எழுவாய் எண்ணப்படும் ப, பொருள் செ, இதில் - ஐயுருபு தொக்கது அஆ வென்றது - அருளின்கட் குறிப்பு, நெருங்கிய வுறவினரென்று தோன்றற்குத் துன்னருங் கேளிரென்றார்.

உடாஅதுமுண்ணாதுந்தம்முடம்புசெற்றுங்
கெடாஅதநல்லறமுஞ்செய்யார்—கொடாஅது
வைத்தீட்டினாரிழப்பர்வான்றோய்மலைநாட
வுய்த்தீட்டுந்தேனீக்கரி.

(இ-ள்.) உடாஅதும் - உடுக்காமலும், உண்ணாதும்-உண்ணாமலும், தம் - தங்களுடைய, உடம்பு - உடலை, செற்றும் - வருத்தியும், கெடாஅத - கெடுதலில்லாத, நல் - நன்மையாகிய, அறமும் - தருமங்களையும், செய்யார் - செய்யாதவர்களாய், கொடாஅது - யாதுங்கொடாது, வைத்தீட்டினார் - பொருளைத்தேடிவைத்தவர்கள், இழப்பர் - இழப்பார்கள், வான் - ஆகாயத்தை, தோய் - அளாவும், மலை-மலைகளடங்கிய, நாட - நாட்டையுடைய(பாண்டியனே) தேன் - மலர்த்தேனை, உய்த்து - ஆராய்ந்து, ஈட்டும் - சம்பாதிக்கும், ஈ - ஈயல்லவோ, கரி - சாட்சி. எ-று.

இ-ம். பொருளைத்தேடிக்கொடாதுவைத்தவர்கள் தேன் ஈயைப்போல இழந்து விடுவார்கள் என்பதாம். ஈட்டினார் - எ, இழப்பர் - ப, பொருளை - செயப்படுபொருள்.

செல்வநிலையாமை முற்றிற்று.

---

## உ-ஆம். அதிகாரம். இளமைநிலையாமை.

அஃதாவது இளமைப்பருவமானது நிலை நில்லாமையாம்.

நரைவருமென்றெண்ணிநல்லறிவாளர்
குழவியிடத்தேதுறந்தார்—புரைதீரா
மன்னாவிளமைமகிழ்ந்தாரேகோலூன்றி
யின்னாங்கெழுந்திருப்பார்.

(இ-ள்.) நரை-நரைதிரை, வருமென்று - வருமென்று, எண்ணி - நினைத்து, நல் - நல்ல, அறிவாளர் - விவேகிகள், குழவியிடத்தே - இளமைப்பருவத்தில், துறந்தார் - மனைவாழ்க்கையை விட்டார், புரை - குற்றம், தீரா - நீங்காத, மன்னா - நிலைபெறாத, இளமை - இளமைப் பருவத்தை, மகிழ்ந்தார் - இச்சித்தார், கோல் - தடியை, ஊன்றி - ஊன்றிக்கொண்டு, இன்னாங்கு-துன்பத்துடன், எழுந்திருப்பார்- எழுந்திருப்பார். எ-று.

இ-ம். அறிவுடையவர்கள் நரைதிரை வருமென்று இளமைப்பருவத்தில் இல்வாழ்க்கையைவிட்டார்கள், இளமைப் பருவத்தை விரும்பினவர்கள் துன்பத்துடன் தடியூன்றி எழுந்திருப்பார் என்பதாம். அறிவாளர் - எழுவாய், துறந்தார் - பயனிலை, மகிழ்ந்தார் - எழுவாய், எழுந்திருப்பார் - பயனிலை, ஏ-அசை, தீயிற்புகைதோன்றி யழிதல் போல இளமையு மழிதலான்-மன்னா இளமை யென்றார்.

நட்புநாரற்றனநல்லாருமஃகினா
ரற்புத்தளையுமவிழ்ந்தன—வுட்காணாய்
வாழ்தலினாதியமென்னுண்டாம்வந்ததே
யாழ்கலத்தன்னகலி.

(இ-ள்.) நட்பு - உறவாகிய, நார் - பாசங்களும், அற்றன - நீங்கின, நல்லாரும் - மகளிரும், அஃகினார் - அன்பிற்குறைந்தார், அற்பு - அன்பாகிய, தளையும் - பந்தங்களும், அவிழ்ந்தன - நெகிழ்ந்தன, உள் - உன்னுள்ளே, காணாய் -

பாராய், ஆழ் - முழுகும், கலத்தன்ன - கப்பலோசைபோல் கலி - உறவினரழுமோசை, வந்ததே - வந்ததல்லவோ (ஆதலால்) வாழ்தலின் - வாழ்தலினால், ஊதியம்-இலாபம், என்-யாது, உண்டாம் - உண்டாகும் எ-று.

இ-ம். கப்பலோசைபோலச் சுற்றத்தார் அழுகுரலோசை வந்ததல்லவோ ஆதலால், இல்வாழ்க்கையின் வாழ்தலினாற் பயனென்ன உண்டாகும் என்பதாம். ஊதியம் - எழுவாய், என்னுண்டாம் - பயனிலை. (உ)

சொற்றளர்ந்துகோலூன்றிச்சோர்ந்தநடையினராய்ப்
பற்கழன்றுபண்டம்பழிகாறு—மிற்செறிந்து
காமநெறிபடருங்கண்ணினார்க்கில்லையே
யேமநெறிபடருமாறு.

(இ-ள்.) சொல்-சொற்கள், தளர்ந்து - குழறி, கோல்-தடியை, ஊன்றி - ஊன்றிக்கொண்டு, சோர்ந்த-தள்ளாடிய, நடையினராய் - நடையையுடையவராய், பல் - பற்கள் கழன்று - உதிர்ந்து, பண்டம் - உடலாகியபண்டம், பழிகாறும்-பழிக்கப்படுமளவும், இல் - இல்வாழ்க்கையில், செறிந்து - நெருங்கி, காமநெறி - ஆசைவழியே, படரும் - நடக்கும், கண்ணினார்க்கு - அறிவுடையார்க்கு, ஏமம்-தமக்குக்கோட்டையாகிய, நெறி - நல்வழியில், படரும்-நடக்கும், ஆறு-வழி, இல்லை - இல்லை. எ-று.

இ-ம் இல்வாழ்க்கை வழியிலே நடப்பவர்கள் உயிர்க்கு நல்வாழ்க்கை வழியில்லை என்பதாம். ஆறு - எழுவாய், இல்லை-பயனிலை, ஏகாரம் - அசை. (௩)

தாழாத்தளராத்தலைநடுங்காத்தண்டூன்றா
வீழாவிறக்குமிவண்மாட்டுங்—காழிலா
மம்மர்கொண்மாந்தர்க்கணங்காகுந்தன்கைக்கோ
லம்மனைக்கோலாகியஞான்று.

(இ-ள்.) அம்மனைக்கோல்-தன்தாய் கைக்கோலானது, தன்கைக்கோல்-தன்கையின்கோல், ஆகியஞான்று - ஆன

காலத்தில், தாழா - தாழ்ந்து, தளரா - தளர்ந்து, தலை - தலையை, நடுங்கா-நடுங்கி, தண்டு-அத்தடியை, ஊன்று-ஊன்றி, வீழா - வீழ்ந்து, இறக்கும்-மரணமாகும், இவண்மாட்டும்-இவளிடத்தும், காழ் - உறுதி, இலா - இல்லாத, மம்மர்-மயக்கம், கொள் - கொண்ட, மாந்தர்க்கு - மனிதர்க்கு, அணங்கு - துன்பம், ஆகும் - உண்டாகும். எ-று.

இ-ம் தன் தாய்கைக்கோலானது தன்கைக்கோலான காலத்து வருத்தமுற்று இறக்குமிவளிடத்து மயக்கங்கொண்டவர்களுக்குத்துன்பமுண்டாகும்என்பதாம். அம்மனைக்கோல் - இவ்விடத்து உயிர்திணைக்கண் ஹைற்று மிகுந்துசெய்யுள்விகாரம். அணங்கு-எழுவாய், ஆகும்-பயனிலை, இவண்மாட்டும் என்பதை இவ்விடத்தெனப் பொருள் கூறுவாருமுளர். (ச)

எனக்குத்தாயாகியாளென்னையீங்கிட்டுத்
தனக்குத்தாய்நாடியேசென்ருள்—டனக்குத்தா
யாகியவளுமதுவானுற்ருய்த்தாய்க்கொண்
டேகுமளித்திவ்வுலகு.

(இ-ள்.) எனக்கு-எனக்கு, தாயாகியாள்-தாயானவள் என்னை - என்னை, ஈங்கு - இவ்விடத்து, இட்டு - பெற்றுவைத்து, தனக்கு - தனக்கொரு, தாய் - தாயை, நாடி - தேடி, சென்ருள் - இறந்தாள், தனக்கு - அவிடனுக்கு, தாயாகியவளும் - தாயானவளும், அதுவானல்-அத்தன்மையளானல், தாய்த்தாய்க்கொண்டு, - தாயைத் தாயைத்தேடிக்கொண்டு, ஏகும் - போகும், இவ்வுலகு - இவ்வுலகமானது, அளித்து-ஏழைமையுடையது. எ-று

இவ்வுலகமானது தாயைத்தாயைத் தேடிக்கொண்டு போகும் ஏழைமையுடையது என்பதாம். [தாய்த்தாய்க்கொண்டு இவ்விடத்துயர்திணை மெய்யீறு ஒன்றுக்கண்மிக்கனசெய்யுள்விகாரம்.] உலகு - எழுவாய், அளித்து - பயனிலை, ஏ - அசை, அளித்து - பெற்றுவைத்தெனினுமாம்.

வெறியயர்வெங்களத்துவேன்மகன்பாணி
முறியார்நறுங்கண்ணிமுன்னர்த்—தயங்க
மறிகுளகுண்டன்னமன்றுமகிழ்ச்சி
யறிவுடையாளர்கணில்.

(இ-ள்.) வெறி-வெறியாடலை, அயர்-செய்கின்ற,வெம்-வெய்ய, களத்து - பலிக்களத்து, வேன்மகன் - பூசாரி, பாணி-கையில், முறி - தளிர், ஆர் - நிறைந்த, நறும் - மணக்கும், கண்ணி - மாலை, முன்னர்-தன்முன்னாக, தயங்க - அசைந்துதொங்க, மறி - ஆடு, குளகு - உணவாக, உண்டன்ன - உண்டாற்போலும், மன்று - நிலைபெறாத, மகிழ்ச்சி - இளமையினுருகுமகிழ்ச்சி, அறிவுடையாளர்கண் - விவேகிகளிடத்தில், இல் - இல்லை எ-று.

ஆடுகொண்டமகிழ்ச்சி அறிவுடையாளர்களிடத்தில்லை என்பதாம் மகிழ்ச்சி - எழுவாய், இல்-பயனிலை, மறியின் மகிச்சிகளைப் போதேனு நில்லாமைபற்றி மன்றுவென்றார். (௬)

பனிபடுசோலைப்பயன்மரமெல்லாங்
கனியுதிர்ந்துவீழ்ந்தற்றிளமை—நனிபெரிதும்
வேற்கண்ணளென்றிவளைவெஃகன்மின்மற்றிவளுங்
கோற்கண்ணளாகுங்குனிந்து.

(இ-ள்) இளமை - இளமைப் பருவமானது, பனி - குளிர்ச்சி, படு - பொருந்திய, சோலை - சோலையில், பயன்-பலனைத்தரும், மரமெல்லாம் - எல்லாமரங்களிலும், கனி - பழங்கள், உதிர்ந்து - உதிர்ந்து, வீழ்ந்தற்று - விழுந்தாற்போலுமாதலால், நனி - மிக, பெரிதும் - பெரிய, வேல் - வேலைநிகர்த்த, கண்ணளென்று-கண்களையுடையவளென்று இவளை - இப்பெண்ணை,வெஃகன்மின் - இச்சியாதிருங்கள் மற்றிவளும் - பின்பிப்பெண்ணும், குனிந்து - கூனியாகி, கோல் - கோலையே, கண்ணளாகும் - கண்ணாக வுடையவளாவாள். எ-று.

தொல்காப்பியம் [வினையின்றொகுதி காலத்தியலும்,] இளமைப் பருவமானது - மரங்களிற் பழங்களுதிர்ந்தாற் போலும் ஆதலால் வேலொத்த கண்களையுடையவளென் றிவளை யிச்சியாதிருங்கள். இவளும் கூனியாகிக் கோலையே கண்ணாகக்கொண்டு திரிவாள் என்பதாம். நீவிர்-தோன்ரு எழுவாய், வெஃகன்மின்-பயனிலை, இவளை-செயப்படுபொருள். (எ)

பருவமெனைத்துளபல்லின்பாலேனை
யிருசிகையுமுண்டீரோவென்று—வரிசையா
னுண்ணாட்டங்கொள்ளப்படுதலால்யாக்கைக்கோ
ளெண்ணாறிவுடையார்.

(இ-ள்) பருவம் - வயது, எனைத்து - எவ்வளவு, உள - உண்டாயிருக்கின்றன, பல்லின் - பற்களினுடைய, பால் - வலிமைப்பகுதி, ஏனை - எவ்வளவு, இருசிகையும் - வன்மையான பதார்த்தங்களையும் மென்மையான பதார்த்தங்களையும், உண்டீரோவென்று - புசித்தீரோ வெனக்கேட்டு, வரிசையால் - முறைமையாக, உள் - உங்களுள்ளாம், நாட்டம் - ஆராய்ச்சி, கொள்ளப் படுதலால் - பிறரால் செய்யப்படுதலால், யாக்கை - உடலினது, கோள் - கொள்கையை, அறிவுடையார் - விவேகமுடையார், எண்ணார் - பொருளாகநினையார். எ-று.

வயதெவ்வளவுபற்களின்பலமெவ்வளவுவலியபதார்த்தங்களையும் உண்டீரோவென்று கிரமமாயுங்களுள்ளம் பிறராலாராய்ச்சி கொள்ளப்படுதலா லுடலின்கொள்கையைவிவேகிகள் பொருளாக வெண்ணார்கள், என்பதாம் அறிவுடையார்-எழுவாய், எண்ணார்-பயனிலை, கோள்-செயப்படுபொருள். (அ)

மற்றறிவாநல்வினையாமிளையமென்னாது
கைத்துண்டாம்போழ்தேகரவாதறஞ்—செய்ம்மின்
முற்றியிருந்தகனியொழியத்தீவளியா
னற்காயுதிர்தலுமுண்டு.

(இ-ள்.) முற்றி - முதிர்ந்து, இருந்த - இருந்த, கனி- பழங்கள், ஒழிய - நீங்க, தீவளியால் - தீக்காற்றால், நல்- நல்ல, காய் - காய்கள், உதிர்தலும் - விழுதலும், உண்டு- உண்டாதலால், நல்வினை - தருமத்தை, மற்று-இனிமேல், அறிவாம் - அறிந்து செய்வோம், யாம் - நாம், இளையம்- இளைமை வயதுடையோம், என்னாது - என்று நினையாது, கைத்து - திரவிடம், உண்டாம் - உண்டாயிருக்கும், போழ்தே - காலத்திலேயே, கரவாது-ஒளிக்காமல்,அறம்-தருமத்தை, செய்ம்மின் - செய்யுங்கள். எ-று.

இ-ம். தீக்காற்றால் பழங்களன்றிக் காய்களுதிர்தலு முண்டு. ஆகையால் தருமத்தைப் பின் செய்வோமென்று நினையாது பொருளுள்ளபொழுதே செய்யுங்கள்என்பதாம். நீங்கள் - தோன்றாஎழுவாய், செய்ம்மின்-பயனிலை, அறம்- செயப்படுபொருள். (௯)

ஆட்பார்த்துழலுமருளில்கூற்றுண்மையாற்
றோட்கோப்புக்காலத்தாற்கொண்டுய்ம்மின்-பீட்பிதுக்கிப்
பிள்ளையைத்தாயலறக்கோடலான்மற்றதன்
கள்ளங்கடைப்பிடித்தனன்று.

(இ-ள்) ஆள்-ஆளை, பார்த்து-பார்த்து, உழலும்-திரியும்,அருள்-தயை, இல்-இல்லாத, கூற்று-இயமன்,உண்மையால் - இருக்கின்றனுதலால், தோட்கோப்பு - கட்டமுதாகிய (தருமத்தை) காலத்தில் - இளைமைப்பருவத்தில்,கொண்டு - தேடிக்கொண்டு, உய்ம்மின் - பிழையுங்கள், பீள்- கருப்பத்தை, பிதுக்கி - பிதுங்கச்செய்து, தாய் - தாயானவள், அலற - அழ, பிள்ளையை - சிசுவை, கோடலால்- கொள்ளுதலால், மற்றதன் - அவ்வியமனது, கள்ளம்-வஞ்சத்தை, கடைப்பிடித்தல் - உறுதியாயறிந்துகொள்ளுதல், நன்று - நல்லது. எ-று.

(அகத்தியம்) [மின்னீறு பலர்பால் வினையொடு முடிமே] இ-ம். இயமனிருக்கிறபடியால் தருமத்தை யிளைமைப் பருவத்திற் செய்து பிழையுங்கள். தாயழப்பிள்ளையைக்கொண்டு போதலாலவன் வஞ்சத்தை யுறுதியாவறிந்துகொள்ளுதலுத்தமம் என்பதாம். கடைப்பிடித்தல்-எழுவாய், நன்று-பயனிலை. (௰)

இளமைநிலையாமை முற்றிற்று.

———

## ௬-ஆம் அதிகாரம். யாக்கைநிலையாமை.



அஃதாவது - சரீரமானது நிலைநில்லாமையாம்.

மலைமிசைத்தோன்றுமதியம்போல்யானை
தலைமிசைக்கொண்டகுடையர்—நிலமிசைத்
துஞ்சினரென்றெடுத்துத்தூற்றப்பட்டாரல்லா
லெஞ்சினாரிவ்வுலகத்தில்.

(இ-ள்.) மலை - மலையின், மிசை - மேல், தோன்றும் - உதிக்கும், மதியம்போல் - சந்திரனைப்போல, யானை - யானையின், தலைமிசை - தலைமேல், கொண்ட - கவியக்கொண்ட, குடையர் - குடையையுடையமன்னர்களும், நிலமிசை - பூமிமேல், துஞ்சினரென்று - இறந்தாரென்று, எடுத்து - பிறரால்லெடுத்து, தூற்றப்பட்டார் - தூறுசொல்லப்பட்டார்கள், அல்லால் - அல்லாமல், எஞ்சினர் - உயிரோடிருந்தார், இவ்வுலகத்து - இந்த வுலகத்தில், இல் - ஒருவருமில்லை

இ-ம். யானைமேலேறிய வரசர்களும் இறந்தார்களென்றுசொல்லப் பட்டார்களே யல்லாமலிவ்வுலகத துயிரோடு வாழ்ந்தவர்க ளொருவருமில்லை என்பதாம். எஞ்சினர்-எழுவாய், இல்-பயனிலை. (௧)

வாழ்நாட்கலகாய்வயங்கொளிமண்டிலம்
வீழ்நாள்படாஅதெழுதலால்—வாழ்நா
ளுலவாமுனொப்புரவாற்றுமின்யாரு
நிலவார்நிலமிசைமேல்.

(இ-ள்.) வாழ்நாட்கு - வாழும்நாள்களுக்கு, அலகாய் - அளவு மரக்காலாக, வயங்கு - பிரகாசிக்கும், ஒளி - கிரணங்களையுடைய, மண்டிலம் - சூரியனானவன், வீழ்நாள் - வீழுங்காலம், படாஅது - உண்டாகாமல், எழுதலால் - உதயமாதலால், வாழ்நாள் - வாழுநாள், உலவாமுன் - கெடாமுன், ஒப்புரவு - தருமத்தை, ஆற்றுமின் - செய்யுங்கள், யாரும் - யாவரும், நிலமிசைமேல் - நிலத்தின்மேல், நிலவார் - நிலைக்கமாட்டார். எ-று.

இ-ம். யாருமுலகத்தில் நிலைநிற்க மாட்டார்கள், உங்களாயுள்கெடுமுன்னமே தருமத்தைச்செய்யுங்கள், என்பதாம். நீங்கள்-தோன்று எழுவாய், ஆற்றுமின்-பயனிலை, ஒப்புரவு-செயப்படுபொருள். (உ)

மன்றங்கறங்கமணப்பறையாயின
வன்றவற்காங்கேபிணப்பறையாய்—பின்றை
யொலித்தலுமுண்டாமென்றுய்ந்துபோமாறே
வலிக்குமாமாண்டார்மனம்.

(இ-ள்.) மன்றம் - சபையில், கறங்க-சத்திக்க, மணப்பறையாயின - மணக்கோலத்திற்கான பறைகள், அன்று - அன்றைக்கே, அவறகு - அம்மாப்பிள்ளைக்கு, ஆங்கே - அவ்விடத்தே, பிணப்பறையாய் - பிணக்கோலத்திற்குக்கொட்டும்பறையாய், பின்றை - பின்பு, ஒலித்தலும் - சத்தித்தலும், உண்டாமென்று - உண்டாகுமென்றுநினைத்து, உய்ந்துபோம் - பிழைத்துப்போகிற, ஆறு-வழியை, வலிக்கும்-துணித்து நிற்கும், மாண்டார் - பெரியோர்கள், மனம் - இருதயம் எ-று

இ-ம். மணத்திற்குக்கொட்டும் பறைகளே பிணத்திற்குக்கொட்டும்பறைகளாமென்று நினைத்துப் பெரியோர்கள் மனம் பிழைக்கும வழியைத்துணிந்து நிற்கும் என்பதாம். மனம்-எழுவாய, வலிக்கும்-பயனிலை, ஆறு-செயப்படுபொருள். (௩)

சென்றேயெறியவொருகால்சிறுவரை
நின்றேயெறிபபறையினை—நன்றேகாண்
முக்காலைக்கொட்டினுண்முடித்தீக்கொண்டெழுவர்
செத்தாரைச்சாவார்சுமந்து.

(இ-ள்) சென்று - போய், பறையினை - பிணப்பறையை, ஒருகால் - ஒருமுறை, எறிப - அடிப்பார்கள், சிறுவரை - சற்றுநேரம், நின்று-நிறுத்தி, (அப்பறையினை) எறிப-இரண்டாமுறை யடிப்பார்கள், முக்காலை - மூன்றுமுறை, கொட்டின் - அடித்தமாத்திரத்தில், உள் - பாடையிடத்து,

மூடி - பிணத்தைச்சீலைபால்மூடி, தீ-நெருப்பை, கொண்டு-சட்டியிற்கொண்டு,செத்தாரை - இறந்தவரை,சாவார்-இனியிறப்பவர்கள், சுமந்து-தோள்களிற்சுமந்து, எழுவர் - மயானத்திற்கெழுவர், நன்றேகாண் - நன்றாகப்பார். எ-று.

(தொல்காப்பியம்) அர் ஆர் ப என வரூஉ மூன்றும் பல்லோர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே.

இ-ம். மூன்றுமுறை பறையறைந்தமாத்திரத்தில்பிணத்தைப்பாடையில் வைத்துச்சீலையால் மூடித்தீயுடன்சுடலைக்குக்கொண்டுபோவார்கள் என்பதாம். சாவார்-எழுவாய், எழுவர்-பயனிலை, செத்தாரை-செயப்படுபொருள், நீ-தோன்றா எழுவாய், காண்-பயனிலை, ஏ-இரண்டும் அசைகள்.

கணங்கொண்டுசுற்றத்தார்கல்லென்றலறப்
பிணங்கொண்டுகாட்டுய்ப்பார்க்கண்டு—மணங்கொண்டீண்
டுண்டுண்டுண்டென்னுமுணர்விஞற்சாற்றுமே
தொண்டொண்டொடென்னும்பறை.

(இ-ள்.)கணங்கொண்டு - கூட்டங்கூடிக்கொண்டு,சுற்றத்தார் - இனத்தார், கல்லென்று - கலீலென்னுஞ்சத்தமுண்டாக, அலற - புலம்ப, பிணம்-சவத்தை, கொண்டு - எடுத்துக்கொண்டு, காடு - சுடுகாட்டில், உய்ப்பார்-செலுத்துபவரை, கண்டும் - பார்த்திருந்தும், மணங்கொண்டு - விவாகஞ்செய்துகொண்டு,ஈண்டு - இவ்விடத்தில்,உண்டுண்டுண்டென்னும் (இல்வாழ்க்கை) உண்டுஉண்டு உண்டு என்னும், உணர்விஞன் - அறிவினனுக்கு,தொண்டொண்டொடென்னும் - தொண்தொண்தொடுஎன்னும் (ஓசையுள்ள) பறை-சாப்பறை, சாற்றும் - (சரீரமில்லாமையை) அறிவிக்கும்.

இ-ள். இனத்தாரழப்பிணத்தைக்கொண்டுபோவாரைக்கண்டிருந்தும் இல்வாழ்க்கையை விரும்பினவனுக்குச்சரீரமில்லாமையைச் சாப்பறையறிவிக்கும் என்பதாம். பறை-எழுவாய், சாற்றும்-பயனிலை. (௬)

நார்த்தொடுத்தீர்க்கிலென்னன்றாய்த்தடக்கிலென்
பார்த்துழிப்பெய்யிலென்பல்லோர்—பழிக்கிலென்

தோற்பையுணின்றுதொழிலறச்செய்தூட்டுங்
கூத்தன்புறப்பட்டக்கால்.

(இ-ள்.) தோற்பை - உடலாகிய பை, உள் - உள்ளே, நின்று - இருந்து, தொழில் - எத்தொழில்களையும், அற - முற்றாக, செய்து - பண்ணி, ஊட்டும் - உண்பிக்கும், கூத்தன் - ஆத்துமாவானது, புறப்பட்டக்கால் - வெளிப்பட்டால், நார் - நாரினால், தொடுத்து - (அவ்வுடலைக்) கட்டி, ஈர்க்கிலென் - இழுத்தாலென்ன, பார்-பூமியின், துழி-வெட்டுப்பள்ளத்தில், பெய்யிலென் - போட்டாலென்ன, பல்லோர் - பலரும், பழிக்கிலென் - பழித்தாலென்ன.

பார்த்துழியென்றதை கண்டுழியென்பாருமுளர்

இ-ம். உயிர்போனபின்பு உடலையெவ்விதஞ்செய்யினும் பயனென்னையென்பதாம். பிறர் - தோன்றா எழுவாய், இழுத்தல்முதலிய-பயனிலை, உடல்-செயப்படுபொருள் (தொல்காப்பியம் வினையியல், ௧௨ சூ)பின்முன்கால் கடைவழியிடத்தென்னு, மன்னமரபிற் காலங்கண்ணியவென்னகிளவியுமவற்றியல்பினவேஇவ்விதியால்புறப்பட்டக்கால்வினையெச்சம்.

படுமழைமொக்குளிற்பல்காலுந்தோன்றிக்
கெடுமிதோர்யாக்கையென்றெண்ணித்—தடுமாற்றந்
தீர்ப்போம்யாமென்றுணருந்திண்ணறிவாளரை
நேர்ப்பார்யார்நீணிலத்தின்மேல்.

(இ-ள்.) படு - பெய்கிற, மழை - மழையினது, மொக்குளில் - குமிழியைப்போல, பல்காலும் - பலகாலமும், தோன்றி - உண்டாகி, கெடும் - அழியும், இது - இஃது, ஓர் - ஒரு, யாக்கையென்று - உடலென்று, எண்ணி - நினைத்து, தடுமாற்றம் - பிறவித்துன்பத்தை, தீர்ப்போம்-நீக்குவோம், யாமென்று - நாமென்று, உணரும்-அறியும், திண்-வலிய, அறிவாளரை - விவேகிகளை, நீள் - நீண்ட, நிலத்தின்மேல் - பூமியிடத்து, நேர்ப்பார் - நேரானவர், யார் - எவர்.

இ-ம். குமிழியைப்போற் றோன்றி யழியுமுடலென் றெண்ணிப்பிறவித்துன்பத்தைநீக்கும்விவேகிகளையொப்பானவர்யார் என்பதாம். நேர்ப்பார்-எழுவாய், யார்-பயனிலை.

யாக்கையையாப்புடைத்தாப்பெற்றவர்தாம்பெற்ற
யாக்கையாலாயபயன்கொள்க—யாக்கை
மலையாடுமஞ்சுபோற்றோன்றிமற்றாங்கே
நிலையாதுநீத்துவிடும்

(இ-ள்.) யாக்கையை - உடலை, யாப்புடைத்தா - பலமுடைத்தாக, பெற்றவர் - அடைந்தவர்கள், தாம் - தாங்கள், பெற்ற - அடைந்த, யாக்கையால் - அவ்வுடலால், ஆய - ஆகிய, பயன் - தருமப்பிரயோசனத்தை, கொள்க-கொள்ளக்கடவர்கள், யாக்கை - உடலானது, மலை - மலையில், ஆடும் - சஞ்சரிக்கும், மஞ்சுபோல் - மேகம்போல, தோன்றி- தோற்றமாகி, நிலையாது - நில்லாமல், நீத்துவிடும் - கெட்டுவிடும். எ-று.

இ-ம். உடலைப்பெற்றவர்கள் தங்களுடலாலாகியதருமப்பயனைக் கொள்ளக்கடவர்கள் உடலோமலைமேற் றோன்று மேகம்போற் றோன்றியழியும் என்பதாம். பெற்றவர்-எழுவாய், கொள்க - பயனிலை, பயன் - செயப்படுபொருள். ()

புன்னுனிமேனீர்போனிலையாமையென்றெண்ணி
யின்னினியேசெய்கவறவினை—யின்னினியே
நின்றானிருந்தான்கிடந்தான்றன்கேளலறச்
சென்றானெனப்படுதலான்.

(இ-ள்.) இன்னினியே - இப்பொழுதே, நின்றான் - நின்றிருந்தான், இருந்தான் - வீற்றிருந்தான், கிடந்தான்- படுத்திருந்தான், தன் - தன்னுடைய, கேள் - இனத்தவர் அலற - புலம்ப, சென்றான் - இறந்தான், எனப்படுதலால்- என்று சொல்லப் படுதலால், புல் - புல்லின், நுனிமேல் - நுனியிடத்து, நீர்போல் - பனிநீரைப்போல, நிலையாமையென்று - சரீரநில்லாதென்று, எண்ணி - நினைத்து, இன்னினியே - இப்பொழுதே, அறவினை - தருமத்தை, செய்க - செய்யக்கடவீர். எ-று.

(தொல்காப்பியம்) தானென்கிளவி பொருண்மைக் குறித்தே இ - ம் இப்பொழுதிருந்தா னிறந்தானென்று சொல்ல

ப்படுதலாற் சரீரநில்லாதென்றெண்ணியிப்பொழுதேதரும
ஞ்செய்யக்கடவீர்களென்பதாம். நீங்கள் - தோன்றாவெழு
வாய், செய்யக்கடவீர் - பயனிலை, அறவினை - செயப்படு
பொருள். (௬)

கேளாதேவந்துகிளைகளாயிற்றோன்றி
வாளாதேபோவாரான்மாந்தர்கள்—வாளாதே
சேக்கைமரனொழிச்சேணீங்குபுட்போல
யாக்கைதமர்க்கொழியநீத்து.

(இ-ள்.) மாந்தர்கள்-மனிதர்கள், கேளாது-கேளாமல், வந்து - வந்து, கிளைகளாய் - உறவினர்களாய், இல் - மனை வாழ்க்கையில், தோன்றி - பிறந்து, வாளாது -சொல்லாது, மரன் - மரத்தில், சேக்கை-கூட்டை, ஒழிய-விட்டு, சேண்-தூரத்தில், நீங்கு - நீங்கும், புட்போல - பறவையைப்போல, யாக்கை - உடலை, தமர்க்கு - உறவினர்களுக்கு, ஒழியநீத்து-ஒழித்துவிட்டு, வாளாது - சொல்லாது, போவர் - இறந்துபோவார்கள். எ-று

இ-ம். மனிதர்கள் மனைவாழ்க்கையிற்பிறந்து தங்களுடலை உறவின்முறையார்களுக் கொழித்துவிட்டிறந்து போவார்கள் என்பதாம். மாந்தர்கள்-எழுவாய், போவார்கள்-பயனிலை. (௭)

யாக்கைநிலையாமை முற்றிற்று.

---

## ௪-ஆம் அதிகாரம். அறன்வலியுறுத்தல்.



அஃதாவது தருமத்தின் பலனையறிவித்தலாம்.

அகத்தாரேவாழ்வாரெண்ணாந்துநோக்கிப்
புகத்தாம்பெறாஅர்புறங்கடை—பற்றி
மிகத்தாம்வருந்தியிருப்பரோமேலைத்
தவத்தாற்றவஞ்செய்யாதார்.

(இ-ள்) மேலை - முற்பிறப்பில், தவத்தால் - தவங்காரணமாக, தவம் - நற்றவம், செய்யாதார் - செய்யாதவர்கள், அகத்தாரே - இல்வாழ்க்கையாரே,வாழ்வாரென்று - வாழ்பவர்களென்று, அண்ணாந்து - தலைநிமிர்ந்து, நோக்கி-பார்த்து, புகத்தாம் - தாமுள்ளே நுழைய, பெறாஅர்-பெறாதவர்களாய், புறங்கடை - தலைவாயிலை, பற்றி - பிடித்துநின்று, மிக - மிகவும், தாம் - தாங்கள், வருந்தி - வருத்தப்பட்டு, இருப்பர் - இருப்பார்கள். எ-று.

இ-ம். முற்பிறப்பிற்றவஞ்செய்யாதார் இப்பிறப்பில் இல்வாழ்க்கையாரேவாழ்பவர்களென்றுதலைவாயிலைப்பற்றி உள்ளே நுழையாதவர்களாய் வருத்தப்பட் டிருப்பார்கள் என்பதாம். தவஞ்செய்யாதார்-எழுவாய், இருப்பர்-பயனிலை. அண்ணார்த்தலென்னுந் தொழிற்பெயர் வினையாங்கால்-அண்ணாருகிறதென்றும் அண்ணார்ந்து இதிலொற்றுக்கெட்டது (தொல்காப்பியம் பெயரியல்௩௦ சூ) "தாமென்கிளவி பன்மைக்குரித்தே" (௧)

ஆவாநாமாக்கநசைஇயறமறந்து
போவாநாமென்னப்புலைநெஞ்சே—யோவாது
நின்றுஞற்றிவாழ்தியெனினுநின்வாழ்நாள்கள்
சென்றனசெய்வதுரை

(இ-ள்.) ஆவாம் - வாழப்பக்கடவோம், நாம் - யாமென்று, ஆக்கம் - செல்வத்தை, நசைஇ - இச்சித்து, அறம் - தருமத்தை, மறந்து - மறந்துவிட்டு, போவாம் - இறந்துபோவோம்,நாமென்ன - நாமென்றெண்ணாத, புலை- இழிவான, நெஞ்சே - மனமே, ஓவாது - இடைவிடாது,

நின்று - நிலைபெற்று, உஞற்றி - முயற்சி செய்து, வாழ்தி யெனினும் - வாழ்வாயானாலும், நின் - உன்னுடைய, வாழ் நாள்கள் - ஆயுள்கள், சென்றன-போயின,செய்வது-இனிநீ செய்வதென்ன, உரை - சொல். எ-று

இ-ம். மனமேபல முயற்சிசெய்து வாழ்வாயானாலும் உன்னுடைய ஆயுள்கள்போயின இனிநீசெய்வதென்னசொ ல்என்பதாம். நீ-எழுவாய், உரை-பயனிலை, செய்வது-செய ப்படுபொருள். (௨)

வினைப்பயன்வந்தக்கால்வெய்யவுயிரா
மனத்தினழியுமாம்பேதை—நினைத்ததனைத்
தொல்லையதென்றுணர்வாரேதடுமாற்றத்
தெல்லையிகந்தொருவுவார்.

(இ-ள்) பேதை - அறிவில்லாதவன், வினைப்பயன்-தீ வினைப்பலன், வந்தக்கால் - வந்தால், வெய்ய - கொடிதாக, உயிரா - பெருமூச்செறிந்து, மனத்தின்-மனத்தினால் நினை த்து, அழியும்-அழிவான், அதனை - அத்தீவினைப்பலனை, நி னைத்து - ஆராய்ந்து, தொல்லையதென்று - முற்பிறப்பிற் செய்ததென்று, உணர்வாரே - அறிபவர்களே, தடுமாற்றத் து-பிறவித் துன்பத்தின், எல்லை-பிரமாணத்தை, இகந்தொ ருவுவார்-கடந்துபோவார். எ-று.

இ-ம். அறிவில்லாதவன் தீவினைவந்தால் மனத்தினினை த்தழிவான் அத்தீவினைமுன்வினையென் றறிந்தவர்களேபிற வித்துன்பத்தளவைக் கடப்பார்கள் என்பதாம். பேதை-எ ழுவாய், அழியும்-பயனிலை, உணர்வார்-எழுவாய், ஒருவு வார்-பயனிலை, (யாப்பருங்கலமேற்கொள்.) தொன்னூல்வி ளக்கத்திலுங்காண்க. வெண்பாமுதலா நால்வகைப் பாவு, மெஞ்சாநாற்பால் வருணர்க்குரிய இவ்விதியால் வெண்பா பிராமணசாதியாம். (௩)

அரும்பெறல்யாக்கையைப்பெற்றபயத்தாற்
பெரும்பயனுமாற்றவேகொள்க—கரும்பூர்ந்த
சாறுபோற்சாலவும்பின்னுதவிமற்றதன்
கோதுபோற்போகுமுடம்பு.

(இ-ள்.) பெறல் - பெறுதற்கு, அரும் - அரிய, யாக்கையை - உடலை, பெற்ற - அடைந்த, பயத்தால் - பலனால், பெரும் - பெரிய, பயனும் - தருமப்பலனையும், ஆற்றவே - மிகவே, கொள்க - கொள்ளக்கடவீர்கள், கரும்பு - கரும்பிலிருந்து, ஊர்ந்த - (ஆலையாற்) பாவிய, சாறுபோல் - சாற்றைப்போல, சாலவும் - மிகவும், பின்னுதவி - (அத்தருமப்பலன்) பிற்காலத்துதவியாம், அதன் - அக்கரும்பின், கோது போல் - சக்கைபோல, உடம்பு - உடல், போகும் - அழிந்துபோகும் எ-று.

இ-ம். பெறுதற்கரிய உடலடைந்தபலனால் தருமப்பலனைக்கொள்ளக் கடவீர்கள். அப்பலன் கரும்பஞ்சாற்றைப் போலாம் உடலதன் சக்கைபோலாம் என்பதாம். நீங்கள்- தோன்றா எழுவாய், கொள்க-பயனிலை, பயன்-செயப்படு பொருள். மற்றுஅசை எவ்வகைப்பிறப்பினு மக்கட்பிறப்பு மேலாகையால், அரும்பெறல் யாக்கையென்றார் (௪)

கரும்பாட்டிக்கட்டிசிறுகாலைக்கொண்டார்
துரும்பெழுந்துவேங்காற்றுயராண்—டுழவார்
வருந்தியுடம்பின்பயன்கொண்டார்கூற்றம்
வருங்காற்பரிவதிலர்.

(இ-ள்.) கரும்பு - கரும்பை, ஆட்டி - ஆலையிலாட்டி, கட்டி - வெல்லக்கட்டியை, சிறுகாலை - முற்காலத்தில், கொண்டார் - கொண்டவர்கள், துரும்பு-அக்கரும்பின் துரும்பு, எழுந்து - தீயாலெழுந்து, வேங்கால் - வேவுங்காலத்தில், ஆண்டு - அவ்விடத்து, துயர் - துன்பத்தால், உழவார்-வருந்தாரதுபோல, உடம்பின் - உடம்பாலாகிய, பயன்-தருமப்பலனை, வருந்தி - பிரயாசப்பட்டு, கொண்டார்-கைக்கொண்டவர்கள், கூற்றம்-இயமன், வருங்கால் - வரும்போது, பரிவது - வருந்துவது, இலர் - இல்லாதவர்களாவார்கள்.

இ-ம். வெல்லக்கட்டியைக் கொண்டவர்கள் கரும்பின் சக்கை வேங்காலத்து விசனப்படார்கள் அதுபோல உடம்பாலாகிய தருமப்பலனைக் கொண்டவர்கள் இயமன் வரும்

போது விசனப்படார்கள் என்பதாம் பயன்கொண்டார்-எழுவாய், பரிவதிலர்-பயனிலை. (௯)

இன்றுகொலன் றுகொலென் றுகொலென்னாது
பின்றையேநின் றதுகூற்றமென்—றெண்ணி
யொருவுமின் றீயவையொல்லும்வகையான்
மருவுமின் மாண்டாரறம்.

(இ-ள்.) இன்றுகொல் - இன்றைக்கோ, அன்றுகொல்-நாளைக்கோ, என்றுகொல் - என்றைக்கோ, என்னாது-வருமென்றெண்ணாது, பின்றையே - பின்னையே, நின்றது-நிற்கின்றது, கூற்றமென்று-இயமனென்று, எண்ணி-நினைத்து, தீயவை-பாவங்களை, ஒருவுமின் - நீக்குங்கள், மாண்டார் - பெரியோராற்சொல்லிய, அறம்-தருமங்களை, ஒல்லும்வகையால்-கூடியமாத்திரம், மருவுமின் - பொருந்தும்படிசெய்யுங்கள்.

இ-ம். இயமன்பின்னே நிற்கிறானென்றெண்ணி அதருமத்தைநீக்கித்தருமத்தைச்செய்யுங்களென்பதாம் நீங்கள்-தோன்றா எழுவாய், ஒருவுமின்-பயனிலை, தீயவை-செயப்படுபொருள். நீங்கள்-எழுவாய், மருவுமின்-பயனிலை, அறம்-செயப்படுபொருள். (தொல்காப்பியம்) [கொல்லையையம்,] அன்றுகொலென்றது வாழ்நாளளவு முடிவெனினு மமையும். (௧0)

மக்களாலாயபெரும்பயனுமாயுங்கா
லெத்துணையுமாற்றப்பலவானாற்—றொக்க
வுடம்பிற்கேயொப்புரவுசெய்தொழுகாதும்பர்க்
கிடந்துண்ணப்பண்ணப்படும்.

(இ-ள்.) மக்களால் - மனிதர்களால், ஆய - உண்டாகிய, பெரும் - பெரிய, பயனும் - விளைவும், ஆயுங்கால்-ஆராயுமிடத்து, எத்துணையும் - எவ்வளவும், ஆற்ற - மிக, பலவானால் - பலவாயிருந்தால், தொக்க - பொருந்திய, உடம்பிற்கே - உடலுக்கே, ஒப்புரவு-தருமத்தை, செய்து-பண்ணி, ஒழுகாது - நடவாமல், உம்பர் - சுவர்க்கத்தில், கிடந்து - இருந்து, உண்ண - அநுபவிக்க, பண்ண - தருமங்கள்செய்ய, படும்-தகும். எ-று.

இ-ம். நீங்களுங்க ளுடலுக்குத் தருமத்தைச் செய்யா துசுவர்க்கத்திலிருந்தநுபவிக்கத் தருமத்தைச்செய்யுங்கள் என்பதாம். நீங்கள்-தோன்றுஎழுவாய், பண்ணப்படும்-பய னிலை, அறங்களை-செயப்படுபொருள். (எ)

உறக்குந் துணையதோ ராலம்வித் தீண்டி
யிறப்ப நிழற்பயந் தாஅங்—கறப்பயனுந்
தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறி தாப்போர்த்து விடும்.

(இ-ள்) உறக்கும் - கிள்ளியெடுக்கும், துணையது - அ ளவினையுடையது, ஓர் - ஒரு, ஆலம்வித்து - ஆலம்விதை யானது, ஈண்டி - நெருங்கிவளர்ந்து, இறப்ப - மிகவும், நி ழல்-நிழலை, பயந்தாஅங்கு - கொடுத்தாற்போல, அறம் - த ருமத்தின், பயனும் - பலனும், தான் - தான், சிறிதாயினு ம் - சிறியதாயிருந்தாலும், தக்கார் - பெரியோர்கள், கைப் பட்டக்கால் - கையிற்பட்டால், வான்-ஆகாயம், சிறிதா-சி றியதாக, போர்த்துவிடும் - மூடிவிடும். எ-று.

இ-ம். ஒரு ஆலம்விதை வளர்ந்து மிகவும் நிழலைக்கொ டுத்தாற்போலத் தருமப்பலன்சிறிதானாலும் பெரியோர்கை யிற்கொடுக்கப்பட்டால் அப்பலன்வானிலும் பெரிதாயிருக் கும் என்பதாம். அறப்பயன்-எழுவாய், போர்த்துவிடும்-ப யனிலை, உறக்கும் என்றது உறங்குமெனக்கூறினும் பொரு ந்தும், அரும்பதக்கொத்து உறக்கல் கறத்தல் விரலாற்கிள் ளுதல். (அ)

வைகலும்வைகல்வரக்கண்டு மஃதுணரார்
வைகலும்வைகலைவைகுமென் றின்புறுவர்
வைகலும்வைகற்றம்வாழ்நாண் மேல்வைகுதல்
வைகலும்வைத் துணராதார்.

(இ-ள்.) வைகலும் - நாள்தோறும், வைகல் - நாள்க ழிதலை, தம் - தம்முடைய, வாழ்நாண்மேல் - ஆயுள்களின் மேல், வைகுதல்வைத்து-செலவுநாளாகவைத்து, வைகலை- அந்நாட்களை, உணராதார் - அறியாதார், வைகலும் - நா

ள்தோறும், வைகல்வா - தம்வாழ்நாள் கழிவுவா, கண்டும்-பார்த்தும், அஃது - அதனை, உணரார் - அறியார், வைகலும் - நாள்தோறும், வைகலை - நாள்களை, வைகுமென்று-கழியுமென்று, இன்புறுவர் - இன்பத்தையடைவர். எ-று.

இ-ம். நாள்தோறும் நாள் செல்லுதலைத் தம்வாழ்நாள் செலவுவாக் கண்டு மதையறியாமல் நாள்தோறும் நாள்செல்லுதலுக்கின்பத்தையடைவர் என்பதாம். உணராதார்-எழுவாய், இன்புறுவர்-பயனிலை யாப்பருங்கலமேற்கோள்அணியியலிலுங்காண்க இஃதகவல்வெண்பா. அகவல் வெண்பாவடி நிலைபெற்றுச் சீர்நிலை பெறாஉந் தொடைநிலை தெரியாது, நடைவயினேடி நெய்வார்ந்தன்ன, நயமுடைத்தாகிய பொருளொடுபுணர்ந்த, வெழுத்தழியாதே என்றதுயாப்பருங்கல மேற்கோளறிக. (௬)

மானவருங்கலநீக்கியிரவென்னு
மீனவிளிவினால்வாழ்வேன்மன்—வீனத்தா
லூட்டியக்கண்ணுமுறுதிசேர்ந்திவ்வுடம்பு
நீட்டித்துநிற்குமெனின்.

(இ-ள்) ஈனத்தால் - இழிவால், ஊட்டியக்கண்ணும்-இரந்தூட்டியவிடத்தும், உறுதி - வலிமை, சேர்ந்து - பொருந்தி, இவ்வுடம்பு - இவ்வுடல், நீட்டித்து - நெடுநாள், நிற்குமெனின் - நிற்குமானால், மானம் - அபிமானமாகிய, அரும் - அரிய, கலம் - ஆபரணத்தை, நீக்கி - தள்ளி, இரவென்னும் - யாசகமென்னும், ஈனம் - கனவீனமான, இளிவினால் - அவமதிப்பால், வாழ்வேன் - உயிர்வாழ்வேன் எ-று.

இ-ம். இரந்தூட்டியவிடத்திவ்வுடம்பு நிலைநிற்குமானாலபிமான மென்கிற வாபரணத்தைத் தள்ளிக்கனவீனமாகியவவமதிப்பினாலுயிர் வாழ்வேன் என்பதாம். யான்-எழுவாய், வாழ்வேன்-பயனிலை, மன்-ஒழியிசை. (௰)

அறன்வலியுறுத்தல் - முற்றிற்று.

---

## ௫-ஆம் அதிகாரம். தூய்தன்மை.



அஃதாவது - சுத்தமல்லாத தன்மையைச் சொல்லுதலாம்.

மாக்கேழ்மடநல்லாயென்றரற்றுஞ்சான்றவர்
நோக்கார்கொனொய்யதோர்புக்கில்லை—யாக்கைக்கோ
ரீச்சிறகன்னதோர்தோலறினும்வேண்டுமே
காக்கைகடிவதோர்கோல்.

(இ-ள்.) யாக்கைக்கு - உடலிற்கு, ஓர் - ஒரு, ஈ - ஈயி னது, சிறகு - சிறகை, அன்னது - ஒப்பாகியது, ஓர் - ஒரு, தோல் - தோலானது, அறினும் - அறிந்தாலும், காக்கை - காகத்தை, கடிவது - துரத்துதற்கு, ஓர் - ஒரு, கோல் - தடி, வேண்டுமே - வேண்டுமல்லவா ஆதலால், மா - மாமரத் தின், கேழ் - தளிர்நிறைத்தையும், மடம்-இளமையையுமு டைய, நல்லாயென்று - பெண்ணேயென்று, அரற்றும் - அ றிவினர்பிதற்றும், நொய்யது - அற்பமாகியதாய்விளக்கும், ஓர்|- ஒரு, புக்கில்லை - உடலை, சான்றவர் - பெரியோர்கள், நோக்கார் - பார்க்கமாட்டார்கள். எ-று.

இ-ம். அறிவுடையோர்கள் இழிவாகியஉடலைப்பாரார் கள் என்பதாம் சான்றவர்-எழுவாய், நோக்கார்-பயனிலை, புக்கில்லை-செயப்படுபொருள், கொல்-அசை, நோக்கார்கொ ல்என்றது இழிவென்றுகாணாரோ வெனினு மமையும், நன் னூல் அரும்பதக்கொத்து கொல்லையைய மசைநிலைக்கூற் றே. (க)

தோற்போர்வைமேலுந்துளைபலவாய்ப்பொய்ம்மறைக்கு
மீப்போர்வைமாட்சித்துடம்பானுல்—மீப்போர்வை
பொய்ம்மறையாக்காமம்புகலாதுமற்றதனைப்
பைம்மறியாப்பார்க்கப்படும்.

(இ-ள்.) தோல் - தோலாகிய, போர்வை-போர்வை யான[illegible], மேலும் - உடன்மேலும், துளை - நவத்வாரங்கள், பலவாய் - பலவிடமாய், பொய் - பொல்லாங்கை, மறைக்கும் - மறைத்து வைத்திருக்கும், மீப்போர்வை - மேற்போர்வை

யால் மாட்சித்து-பெருமையுடையது, உடம்பானல்-உடலானதால், மீப்போர்வை - மேலேபோர்த்தபோர்வையால், பொய் - மலங்களை, மறையா - மறைக்கும், காமல்-காமறு கர்ச்சியை, புகலாது - இச்சியாது, அதனை - அவ்வுடலை, பைம்மறியா - உட்புறந்திருப்பிய பையைப்போல, பார்க்கப்படும் - நோக்கத்தகும். எ-று.

பைம்மறியாப் பார்க்கப்படும் பாம்பின் கடைவாய்ப் பையுள் மறிபட்ட விடம்போலப் பார்க்கப்படுமென்பாருமுளர்.

இ-ம். மலங்களைமறைத்துத் தோலால்மூடிவைத் திருக்குமுடலை யுட்புறத்திருப்பிய பையைப்போலப் பார்க்கவேண்டும் என்பதாம். மீ-தோன்ருஎழுவாய், பார்க்கப்படும்-பயனிலை, உடம்பினை-செயப்படுபொருள், மற்று அசை. ()

தக்கோலந்தின்றுதலைநிறையப்பூச்சூடிப்
பொய்க்கோலஞ்செய்யவொழியுமே—யெக்காலு
முண்டிவினையுளுறைக்குமெனப்பெரியோர்
கண்டுகைவிட்டமயல்.

(இ-ள்.) எக்காலும் - எந்நாளும், உண்டி - உணவால் வரும், வினையுள் - தொழிலால், உறைக்குமென - துர்க்கந்தம் வீசுமென்று, பெரியோர் - பெரியோர்கள், கண்டு-அறிந்து, கைவிட்ட - கைவிட்டுவிட்ட, மயல் - உடலான செத்தைக்கு, தக்கோலந்தின்று - தாம்பூலந்தின்று, தலைநிறைய-சிரசுநிறைய, பூச்சூடி - பூவைத்தரித்து, பொய்க்கோலம்-பொய்யாகியவழகை, செய்ய - செய்தால், ஒழியுமே - உள்ளுள்ள மலநீங்குமோ. எ-று.

இ-ம் பெரியோர்களுணவுத்தொழிலால் நாறுமென்று வெறுத்தவுடலுக்குத்தாம்பூலந்தின்றுபூவைச்சூடினல் உள்ளிருக்குமலங்கள் போய்விடுமோ என்பதாம். மலம்-தோன்ருஎழுவாய், ஒழியுமே-பயனிலை, தொன்னூல்விளக்கம்வலமிலைருவெற்றிலைதின்றல் தக்கோலமென்றேசாற்றப்படுமே.

தெண்ணீர்க்குவளைபொருகயல்வேலென்று
கண்ணில்புன்மாக்கள்கவற்ற—விடுவனோ
வுண்ணீர்களைந்தக்கானுங்குசூன்றிட்டன்ன
கண்ணீர்மைகண்டொழுகுவேன்.

(இ-ள்.) உள் - உள்ளிருக்கும், நீர்-சலத்தை, களைந்தக்கால் - எடுத்தால், நுங்கு - நுங்கை, சூன்றிட்டன்ன-தோண்டினாற்போலும், கண் - கண்களுடைய, நீர்மை - குணத்தை, கண்டு - பார்த்து, ஒழுகுவேன் - நடப்பேன், தெள் - தெளிந்த, நீர் - சலத்திலுள்ள, குவளை - நீலோற்பலத்தையும், கயல் - கெண்டைமீனையும், வேல் - வேலாயுதத்தையும், பொருவென்று - ஒப்பென்று, கண்ணில்-ஞானக்கண்ணில்லாத, புல் - அற்பமான, மாக்கள் - மனிதர்கள், கவற்ற - என்மனதைக் கவலைப்படுத்த, விடுவனோ - யான் துறவறத்தை விடுவனோ. எ-று.

இ-ம். நுங்குக்கண்களைப்போலப் பெண்கள் கண்களைக்கண்டு நடப்பேன் அறிவீனர் என்மனதைக்கவலைப்படுத்த யான்துறவறத்தைவிடுவனோஎன்பதாம். யான்-எழுவாய், விடுவனோ-பயனிலை, [தொகுபெயர் வேற்றுமைத் தொடர்பெயரென்ன வியற்றிரி பழிவாக்க மியைந்தாந்தொகையே] இவ்விதியால் நீர்களைந்தக்கால் என்றதில் ஐயுருபுத்தொகையில் இயல்பாயிற்று. (௪)

முல்லைமுகைமுறுவன்முத்தென்றிவைபிதற்றுங்
கல்லாப்புன்மாக்கள்கவற்ற—விடுவனோ
வெல்லாருங்காணப்புறங்காட்டுதிர்ந்துக்க
பல்லென்புகண்டொழுகுவேன்.

(இ-ள்.) எல்லாரும் - யாவரும், காண - அறிய, புறங்காட்டு - சுடுகாட்டில், உதிர்ந்து - உதிர்ந்து, உக்க - மக்கிக்கிடக்கிற, பல்லென்பு - பல்லாகிய எலும்பை, கண்டு-பார்த்து, ஒழுகுவேன் - நடப்பேன், முறுவல் - அப்பற்களை, முல்லை முகையென்று - முல்லையரும்பென்றும், முத்தென்று - முத்தென்றும், இவை - இவைகளை, பிதற்றும்-

